2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம். 8798

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 13 மதுரை 5—4—75 சனி மலர்: 55

## மதுரை, கோவை, தஞ்சையில்

## 163 டாக்டர்கள் மறியல் - கைது

மதுரை ஏப் 3—

வேலை வாய்ப்புக்கோரி மார்ச் 21-ம் தேதி முதல் வேலை நிறுத்தம் செய்து வரும் இளம் டாக்டர்கள் சிவில் சர்ஜன்கள் முன்பு மறியல் செய்து வருகிருர்கள்.

இன்று மதுரையில் பயிற்சி மருத்துவர் சங்க செயலாளர்கள் ஓடையன் திருமலைசாமி தலைமையில் 17 பெண்கள் உட்பட 85 டாக்டர்கள் மறியல் செய்து கைதாயினர்.

கோவையில் பெண்கள் உட்பட 80 டாக்டர்களும் தஞ்சையில் 17 பெண்கள் உட்பட 24 டாக்டர்களும் மறியல செய்து கைதாயினர்.

## இந்த நன்கொடைக்கு ஈடு ஏது? எடுப்பு ஏது?

கல்கத்தா, ஏப் 4—

கொலைக் குற்றம் சாட்டப்பட்டு, மேற்கு வங்க பெர்ஹாம்பூர் சிறையில் ஆயுள் தண்டனை அனுபவித்து வரும வீராங்கனை தோழியர் பாரதி சாப்தர். மார்க்சிஸ்ட் தலைவர் சரோஜமுக்கர்ஜிக்கு ரூ 5 மணியார்டர் செய்துள்ளார்.

கடந்த ஆண்டு நடந்த அகில இந்திய இரயில்வே வேலை நிறுத்தத்தில் பங்கு கொண்டதற்காகப் பழி வாங்கப் பட்டவர்களின் நிவாரண நிதிக்காக அனுப்பியுள்ளார்.

# பிரஜா உரிமைக்கான கூட்டுக் கிளர்ச்சியில் மார்க்சிஸ்டுகள் முன் நிற்பார்கள்

## அடக்குமுறைக்குப் பலியான முதற்பெரும் கட்சி தனித்து நிற்க முடியாது

# ஏப்ரல் 6: அவசர நிலைச் சட்ட எதிர்ப்பு நாள்

## மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவல்

கல்கத்தா, ஏப். 4 —

**அவசர நிலையை ரத்துச்செய்ய வேண்டுமென்று ஏப்ரல் 6-ம் நாள் நடத்தப்படும் கிளர்ச்சியானது, பறிக்கப்பட்டுள்ள பிரஜா உரிமைகள் அனைத்தையும் மீட்பதற்கான நாடு தழுவிய கூட்டு இயக்கத்தின் ஆரம்பக் கிளர்ச்சியாக விளங்கும் என மார்க்சிஸ்ட் தலைவர் தோழர் இ. எம். எஸ். நம்பூதிரிபாட் அறிவிக்கிருர்.**

மேற்கு வங்கத்திலும், கேரளத்திலும் மற்றும் பல மாநிலங்களிலும் காங்கிரஸ் ஆட்சியின் சுரண்டல் வர்க்கக் கொள்கைகளை எதிர்த்துப் போராடுவதில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி முன் வரிசையில் நிற்பதால், அதன் தலைவர்களும் ஊழியர்களும் காங்கிரஸ் ஆட்சியின் கொடூர அடக்குமுறைகளுக்குப் பலியாகி வருகிருர்கள்.

ஆதலால்தான் பிரஜா உரிமைகளுக்கான போராட்டங்களை வளர்ப்பதில் மார்க்சிஸ்ட் கட்சியினர் மற்றெல்லாக் கட்சியினரையும்விட அதிக அக்கறைகொண்டுள்ளனர் என்றும் தோழர் இ. எம். எஸ். கூறினர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஏடான, 'பீப்பிள்ஸ் டெமாக்ரஸி'யில், அதன் ஆசிரியர் தோழர் இ. எம. எஸ். அவர்கள் எழுதிய தலையங்கத்தில், பிரஜா உரிமைக்கான போராட்டத்தின் முக்கியத்துவத்தைப் பற்றி விளக்கியுள்ளார்.

### ஏப்ரல். ஆறும் நாள் கிளர்ச்சி ஜே பி இயக்கத்துடன் சேருக!

வருகின்ற ஞாயிறு (ஏப்ரல் 6-ம் நாள் ஜெயப்பிரகாஷ் நாராயண் தலைமையில் நடைபெறும் இயக்கத்தில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர்களும் நண்பர்களும் கலந்துகொள்ள வேண்டுமென்று கட்சியின் மத்தியக் கமிட்டி கேட்டுக் கொண்டுள்ளது.

இந்த இயக்கம் பிரஜா உரிமைகளைப் பெறுவதற்கான முக்கியமான போராட்டத்தின் ஒரு பகுதியாகும்.

இ. எம். எஸ்.

### அவசர நிலையின் அந்தரங்கம்

1971-ம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் இந்திய—பாகிஸ்தான் யுத்தம் முடிவுற்றது.

யுத்தம் முடிவுற்று மூன்று ஆண்டுகளாகியும, யுத்தகால நடவடிக்கையாகப் பிறப்பிக்கப்பட்ட அவசர நிலைப் பிரகடனத்தை இன்னும் ரத்துச் செய்யவே இல்லை.

இந்த அவசர காலப் பிரகடனம் இன்னும்நீடிக்கப்பட்டுக்கொண்டிருப்பதுஎதைக் காட்டுகிறது?

இந்த அவசர நிலை பிறப்பிக்கப்பட்டது யுத்தத்தில் வெற்றி பெறுவதற்காக அல்ல என்பதும்—பொதுமக்கள் மீது ஆளும் வர்க்கங்கள் தாக்குதல்கள் தொடுக்க அனுகூலமாக இருக்கவேண்டுமென்பதற்காகத்தான் பிறப்பிக்கப்பட்டது என்பதுவும் தெட்டத் தெளிவாகத் தெரிகிறது.

### எதிர்க்கட்சி மீது பாயாது என்ற வாக்குறுதி எங்கே?

1971 பாகிஸ்தான் யுத்தத்தின் போதும் சரி, அதற்கு முன்னர் 1962ல் இந்திய—சீன யுத்தத்தின் போதும் சரி, அவசர காலச் சட்டத்தை, அரசாங்கத்திற்கு எதிராகவுள்ள அரசியல் கட்சிகள் மீதும் பொதுஜன ஸ்தாபனங்கள் மீதும் ஒருபோதும பாய்ச்ச மாட்டோம் என்று அரசாங்கத் தலைவர்கள் வாக்குறுதி அளித்தார்கள்.

ஆனல் உண்மையில் நடந்தது என்ன?

இரண்டு தடவைகளிலும் பிறப்பிக்கப்பட்ட அவசர நிலைச் சட்டங்களை அரசாங்கத்திற்கு எதிராக உள்ள அரசியல எதிரிகள் மீது தான் பாய்ச்சினர்களே தவிர, வேறு யார் மீதும் பாய்ச்சவில்லை.

1962-ம் ஆண்டிலும், 1965-ம் ஆண்டிலும் இந்திய பாதுகாப்புச் சட்ட விதிகளை யாருக்கு எதிராகப் பிரயோகித்தார்கள் எனபதை அனைவரும அறிவார்கள். காங்கிரஸ் ஆட்சியை உறுதியாக எதிர்த்து வந்த இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சியின் செயல் வீரர்களைச் சிறையில் தள்ளத்தான் பாதுகாப்புச் சட்டம பயன்படுத்தப்பட்டது. அதன் விளைவாகத்தான் 1964ம் ஆண்டில் திருத்தல்வாதிகளிடமிருந்து செயல வீரர்கள் உடைத்துக கொண்டு வரலானர்கள்.

இப்பொழுதுதான் என்ன நடக்கிறது? அவசர கால நிலைப் பிரகடனம் பிறப்பிக்கப்பட்டதைத் தொடர்ந்து, இந்தியப் பாதுகாப்புச் சட்ட விதிகளையும மற்றும் பல அடக்குமுறைச் சட்ட விதிகளையும மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு எதிராகவும் காங்கிரஸ் ஆட்சிக்கு எதிராக, விட்டுக் கொடுக்காமல் போராடும் ஏனைய வீரர்களுக்கு எதிராகவும்தான் பிரயோகித்து வருகிருர்கள்.

### தடுப்பது எதுவுமில்லை

ஜெயப்பிரகாஷ் நாராயண் கூறக்கூடிய அத்தனை கொள்கைகளையும் மார்க்சிஸ்ட் கட்சி, அப்படியே ஆதரிக்கவில்லையென்று திரும்பத் திரும்ப மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி விளக்கிக் கூறியுள்ளது. ஜெயப்பிரகாஷ் நாராயண் தலைமையில் கடந்த ஆண்டு நவம்பர் மாதத்தில் டில்லியில் வைத்து உருவாக்கப்பட்ட தேசியஇணைப்பு கமிட்டியில் சேர்ந்துள்ள பல்வேறு அரசியல் கட்சிகளின் கொள்கைகள் முழுவதையும் அப்படியே நாங்கள் ஏற்கவில்லை எனபதனையும் பலதடவை விளக்கியுள்ளோம.

ஆயினும், ஜெயப்பிரகாஷ் தலைமையிலுள்ள தேசிய ஒருங்கிணைப்புக் கமிட்டியானது, ஏப்ரல் 6-ம் தேதியை அவசர காலப பிரகடனத்தை ரத்துச் செய்யக் கோரும் நாளாக அனுஷ்டிக்க வேண்டுமென்று அறைகூவல் விடுத்திருக்கும் போது, அதற்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லையென்று ஒதுங்கியிருக்க முடியுமா? முடியாது. அந்தக் கிளர்ச்சியில் நாங்கள் சேரக்கூடாது என்று குறுக்கே நிற்கும் தடைகள் எதுவுமில்லை.

### அடக்குமுறைக்கு ஆளானவர்கள் அதிகம் பேர் மார்க்சிஸ்டுகளே

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைப் போல், காங்கிரஸ் ஆட்சியின் அடக்குமுறைகளுக்குப் பலியானதொரு கட்சி, வேறு எந்தக் கட்சியுமிருக்க முடியாது.

மேற்கு வங்கத்தில் மாத்திரமே, 1000க்கு மேற்பட்ட மார்க்சிஸ்டு ஊழியர்களை மிருகத்தனமாகப் படுகொலை செய்திருக்கிருர்கள். பல்லாயிரம் மார்க்சிஸடுகளை சிறைக்கூடங்களிலே தள்ளியிருக்கிருர்கள். சித்திரவதைகளுக்கு ஆளானவர்களுக்கு கணக்கு வழக்கு உண்டா? வாழ்நாள் முழுவதுமே முடங்கிக் கிடக்கும் படியாக அவயவங்கள் முறிக்கப்பட்டு முடமாகிக் கிடப்பவர்களின எண்ணிக்கையும் ஏராளம், ஏராளம்!

இந்தியப்பாதுகாப்புச் சட்டப்படியும், மிஸ்ஸா சட்டப்படியும, மற்றுமுள்ள சட்டங்களின்படியும் விசாரணையிலலாமல், சிறைகளிலே தள்ளப்பட்டு வாடி வதங்குவோரின் எண்ணிக்கை, இதர எல்லா கட்சியினரையும் விட, மார்க்சிஸ்ட் கட்சியினரும் அவர்களது நண்பர்களும்தான் அதிகமாக உள்ளார்கள். குறிப்பாக, மேற்கு வங்கத்தில் இந்தக் கொடுமையை காண முடியும்.

கேரளத்திலும், இதர மாநிலங்களிலும், காங்கிரஸ் ஆட்சியின் வர்க்கக் கொள்கைகளுக்கு எதிராக உழைப்பாளி மக்களைத் திரட்டிப் போராடிக் கொண்டிருக்கும் மார்க்சிஸ்டுகள் மீது நான் காங்கிரஸ் ஆட்சியின் அடக்குமுறை உருளைகள் நசுக்கிக் கொண்டிருக்கின்றன.

### மார்க்சிஸ்டுகளின் கடமை

இதர எல்லாக் கட்சியினரையும் விட, அதிகமான அளவுக்கு காங்கிரஸ் ஆட்சியின அடக்குமுறைகளை அனுபவித்து வருகின்றவர்கள் என்ற முறையில, பிரஜா உரிமைகளை மீட்கும் போராட்டத்தை வளர்ப்பதில் மார்க்சிஸ்டுகள் எல்லோரையும் விட அதிக அக்கறை கொண்டிருக்கிருர்கள்.

ஆகவேதான், அவசர நிலையை ரத்துச் செய்யக்கோரி ஏப்ரல் 6ம் நாளில் இந்தியா பூராவும் நடத்தப்படும் கிளர்ச்சியை, பிரஜா உரிமைகளை அனைத்தையும் பெறுவதற்கான போராட்டத்தின் துவக்கம் இது என்று கருதி மார்க்சிஸ்ட் கட்சியும் அதன் நண்பர்களும் இதில் ஈடுபடுவார்கள்.

## நாம்பென் நகருக்குள் புரட்சிப் படைகள்

நாம்பென், ஏப். 3—

கம்போடிய விடுதலைப் படைகள் மெகாங் நதியில் நீக்லுயாங் துறைமுகத்தை கைப்பற்றி நாட்டின் தலைநகரான நாமபென்னிற்குள் நுழைந்து விட்டன.

நகருக்குள் இருக்கும் பொம்மை அரசின் கூலிப் படைகள் மீது புரட்சிபடைகள் தங்கள் இறுதித் தாக்குதலை தொடுத்துள்ளனர்.

### தென்வியட்னமில்

அதே போல் தென் வியட்நாம் விடுதலைப்படைகள் தென் வியட்நாமின் பல நகரங்களை கைப்பற்றியதன் மூலம் பொம்மை அரசு தென் வியட்நாமின் தென் கடைசிப்பகுதிக்கு நெருக்கப்பட்டது,

சைகோனை குறிவைத்து முன்னேறும் விடுதலைப் படைகள் சைகோனை நோக்கிச் செல்லும் ஒரு பெருஞ் சாலையொன்றை 35 மைல தூரத்தில் விடுதலைப்படைகள் துண்டித்துவிட்டன.

இறுதிக் கட்டத்தை நெருங்கிக் கொண்டிருக்கும் தியூ பொம்மை அரசுக்கு ராணுவ ஆயுத உதவிசெய்ய ஏற்பாடு செய்வதாக அமெரிக்க ஜனதிபதி போர்டு உறுதிமொழி கொடுத்துள்ளாராம்.

### அரசு ஊழியர்—ஆசிரியர் உள்ளாட்சி ஊழியர்களின் பேரமைப்பு சார்பில்

## இன்று பேரணி

மதுரை, ஏப். 4—

அகவிலைப்படி கோரிக்கைக்காகவும், என். ஜி. ஓ சங்க மாநில நடவடிக்கைக் குழு தலைவர் திரு ஆர். ஏ. கூடலிங்கம மீதான 'சஸ்பெண்ட்' உத்தரவை திரும்பப் பெறக்கோரியும் இன்று (சனி) தமிழகம் முழுவதும் பேரணிகளும பொதுக்கூட்டங்களும நடக்கின்றன.

மாநில அரசு ஊழியர்களும, ஆசிரியர்களும், உள்ளாட்சி ஊழியர்களுமாக சுமார் 5 இலட்சம பேரை பிரதிநிதித்துவப்படுத்தும் பேரமைப்பின சார்பில இந்தப் பேரணி நடககிறது.

மாலையில் நடக்கும் பொதுக்கூட்டத்தில் சர்வ கட்சி, மற்றும் சங்கத்தலைவர்கள் உரையாற்றுவர்.

### மதுரையில்

அன்று மாலை 5 மணிக்கு மதுரை மாநகரில் —கலெக்டர் அலுவலகத்திலிருந்து பெரும் ஊர்வலம புறப்படும். கூடலழகர் பெருமாள் கோவில திடலில் பொதுக் கூட்டம் நடக்கும்.

### சென்னை ஐ.டி.சி. தொழிலாளர் குமுறல்

சென்னை, ஏப். 4—

இங்குள்ள இந்தியா டுபாக்கோ பிரிண்டிங் தொழிற்சாலையில் கேசுவல தொழிலாளர்களாகப் பணி புரிந்து வரும் 500 பேருக்கு வேலை மறுக்கப்பட்டு அலைக் கழிக்கப்படுகிருர்கள்.

குறிப்பாக கார்ட்டன் மேக்கிங், பிரிண்டிங் டிபார்ட்மெண்டுகளில பெரும் கெடுபிடிகள் செய்யப்படுகின்றனவாம.

நிர்வாகத்தின் இந்த மனிதாபிமானமற்ற சித்திரவதைக்கு இங்குள்ள சங்கமான திமுக பேரவையும உடந்தையாக இருக்கிறது என்று அககம்பெனி தொழிலாளர் குற்றம சுமத்துகிருர்கள்.

இந்த அநீதியை எதிர்த்துப் போராட தொழிலாளர்கள் தயாராகி வருகிருர்கள்.

### ஸ்டேசன் மாஸ்டர் உண்ணுவிரத கிளர்ச்சி

மதுரை, ஏப் 3—

இங்குள்ள இரயிலவே டிவிசனல் ஆபீஸ் முன்பு ஸ்டேசன் மாஸ்டர்கள் நேற்றும் இன்றும உண்ணுவிரதம் மேறகொண்டனர்.

அவசர கால விடுப்புக் கோரியும், கடைப்பிடிக்க முடியாத வேலை நேர ரோஸ்டர்களைச் சரிப்படுத்தக் கோரியும, இரயிலவே போர்டினல் அனுமதிக்கப்பட்ட உரிமைகளை அமுல்படுத்தாதிருப்பதைக் கண்டித்தும் மறறும் சில கோரிக்கைகளை வற்புறுத்தியும அகில இந்திய ஸ்டேசன மாஸடர்கள் சங்கத்தின் மதுரை டிவிசன் கிளை சார்பில ஸ்டேசன் மாஸ்டர்களான பரமன், விஸ்வநாதன் பி ஆர் பிள்ளை. முருகன், சுந்தரராஜன் ஆகியோர் உண்ணுவிரதம மேற்கொண்டனர்.

முன்னதாக, அகில இந்திய ஸ்டேசன் மாஸ்டர்கள் சங்கத்தின் செயலாளர் பி சிவனபிள்ளை தலைமையில் பெரும ஊர்வலம நடந்தது.

டிவிசனல் ஆபீஸ் முன்பு பந்தலபோட அனுமதி மறுக்கப்பட்டதால மரத்தடியில உண்ணுவிரதம இருந்தனர்.

### சவேரா ஓட்டல் போராட்டம்:

### உண்ணுவிரதிகள் மீது ரவுடித் தாக்குதல் போலீஸ் அராஜகம்

சென்னை, ஏப். 1—

இங்குள்ள சவேரா ஓட்டலில் 82 தொழிலாளர்கள் ஆட்குறைப்புச் செய்யப்பட்டதைக்கண்டித்துஉண்ணுவிரதமிருந்ததொழிலாளர்கள மீது மார்ச் 29ந் தேதி இரவு 12மணிக்கு ரவுடிகளை ஏவி தாக்குதல் நடத்தப்பட்டது. இதற்கு திமுக அரசின் போலீசார் உடந்தையாகச் செயல்பட்டனர்.

பந்தல், கொடிகள் தூக்கி எறியப்பட்டன. பல தோழர்கள் காயமடைந்துள்ளனர். சவேரா தொழிலாளர்களின் கோரிக்கையை முறியடிக்க முன்னுள் போலீஸ் அதிகாரிகளான ஓட்டல் நிர்வாகிகளின் சதிகள் செயல்பட ஆரமபித்துள்ளன.

29ந் தேதி இரவு திடீர் என்று ரவுடிகள் தொழிலாளர்களைத் தாக்க ஆரமபித்தனர். நிர்வாக உதவி மானேஜர் வேணுகோபால், வீராச்சாமி ஆகியோர் இந்த ரவுடிகளுக்கு தலைமை வகித்து வந்ததாகச் சொல்லப்படுகிறது. உடனே ராயப்பேட்டை போலீஸ் நிலைய அதிகாரிகள் தொழிலாளர்கள் அனைவரையும் கைது செய்து பலாத்காரமாக டாக்சிகளில் ஏற்றிக்கொண்டு சென்ருர்கள். இந்த நிலையில் உண்ணுவிரதப் பந்தலும் கொடிகளும் கிழித்தெறியப்பட்டது.

போலீஸ்அதிகாரிகளின் உதவியுடன் திட்டமிட்டு இந்த நிகழ்ச்சி நடைபெற்றது. சங்க உதவித் தலைவர் ரஷீத், செல்லச்சாமி, பீட்டர்பெரேரா மற்றும் உண்ணுவிரதம் இருந்த தோழர் ஜோசும காயமடைந்தனர். இவர்கள் மருத்துவமனையில் சிகிச்சை பெற வேண்டியதாயிற்று.

### கண்டன ஆர்ப்பாட்டம்

தகவல் அறிந்தவுடன் பல்வேறு ஓட்டல் தொழிலாளர்கள் 30-ம் தேதி காலையில் கண்டன ஆர்ப்பாட்டம் நடத்தினர்கள். மாலையில் ராயப்பேட்டை போலீஸ்நிலையத்தைநோக்கி ஊர்வலம் என்று அறிவிக்கப்பட்டவுடன் நூற்றுக்கணக்கான ஆயுதம தாங்கிய போலீசாரை கொண்டு வந்து குவித்தனர். ஊர்வலம் அனுமதி மறுக்கப்பட்டது.

பிறகு, வேறு பாதையில் ஊர்வலம செல்ல அனுமதி வழங்கப்பட்டது. தொழிலாளர்களை தாக்கிய ரவுடிகள்மீதும்போலீஸ்அதிகாரிகள் மீதும நடவடிக்கை எடுக்கக் கோரி உணர்ச்சி மிகு ஊர்வலம நடைபெற்றது. ஊர்வலத்தைச்சுற்றி ஆயுதம் தாங்கிய போலீசாரும் வருவதைக் கண்ட பொதுமக்களிடையே பரபரப்பு ஏற்பட்டது.

போராட்டம் தொடர்ந்து நடத்துவோம் என்ற உறுதியுடன், பந்தல் ஏதும் இல்லாமலேயே கொளுத்தும வெயிலில் உண்ணுவிரதம தொடருகிறது. 30-ம தேதிபோக்குவரத்து ஊழியர் சங்க பிரதிநிதிகள் உண்ணுவிரதமிருந்தனர்.

### மார்க்சிஸ்ட், சி ஐ டி யூ கண்டனம்

போலீசின் இந்த அடக்குமுறையையும், தொழில் தகராறில் தலையிட்டு சட்டத்துக்குப் புறமபாக முதலாளிகளுக்கு ஆதரவாகச் செயல்படுவதையும,மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும், சிஐடியூவும் வன்மையாகக் கண்டித்துள்ளன.

தொழிலாளர்களுக்குநியாயம் வழங்கவும், குற்றம் இழைத்த போலீஸ் அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கவும் வேண்டுமென்று வற்புறுத்தி முதலமைச்சருக்கு கடிதம் எழுதியுள்ளன.

அனைத்துத் தொழிற் சங்கங்களும், ஜனநாயகவாதிகளும் இந்த அக்கிரமத்தைக் கண்டிக்க முன்வரவேண்டும என்றும் கேட்டுக் கொண்டுள்ளன.

# தீக்கதிர்

## கல்விப் பெருக்கமும் இல்லை
# கற்ற கல்வியால் பயனுமில்லை

பொருளாதார நிலைமை இந்தியாவில் எப்படி சீரழிந்து கிடக்கிறதோ அதே போன்றுதான் கல்வியின் நிலைமையும் சீரழிந்து கிடக்கிறது,

கல்வி அறிவு எவ்வளவு வேகமாக அனைத்து பகுதி மக்களிடமும் பரவ வேண்டுமோ அந்த வேகத்தை தடுப்பதாகவே அரசின் போக்கு உள்ளது.

ஏனெனில் 1975ம் ஆண்டு மக்கள் தொகையின் கணக்குப்படி மொதத ஜனத்தொகையில் 33-8 சதவீதம் பேரே கல்வியறிவு—கையெழுத்து போடத் தெரிந்தவர்களிலிருந்து உயர்மேற்படிப்பு வரை—உள்ளவர்களாக இருக்கும்போதே படித்து வேலையின்றி இன்றி இருப்போரின் எண்ணிக்கை ஒரு கோடியை எட்டிவிட்டது.

இந்நிலையில் பெரும் பகுதி மக்கள் கல்வி கற்றவர்களாக இருந்தால் படித்து வேலையின்றி இருப்போரின் எண்ணிக்கை எவ்வளவோ அதிகமாக அதிகரித்திருக்கும். வேலை கோரி நடத்தப்படும் போராட்டத்தின் வீச்சும் அதிகரித்திருக்கும். மொத்தப் பெண்களில் 28 சதவீதம் பேரே கல்வி கற்றவர்களாக இருக்கும்போது பயிற்சி பெண் டாக்டர்களே வேலை உத்திரவாதம் கோரி மறியல் போராட்டத்தில் குதிப்பதெல்லாம் இதனைக்காட்டவில்லையா?

இம்மாதிரியான போக்குகள் ஆளவந்தார்களின் கொள்கைகளில் பிரதிபலிக்காமல் இருக்க முடியாது.

படிக்கும் வயது வந்த குழந்தைகள் அனைவருக்கும் கட்டாயக் கல்வி முறை 1965ம் ஆண்டுக்குள் அமுல்படுத்தப்பட வேண்டும் என 'சுதந்திர' இந்தியாவின் அரசியல் சட்டம் கூறுகிறது.

அப்படியொரு சட்டம் இருக்கிறது என்பதையே ஆட்சியாளர்கள் மறந்தே விட்டனர்.

இரண்டரை ஆண்டுகளுக்கு முன்பு மத்திய கல்வி ஆலோசனைக் குழு, 5வது திட்டத்தில் கல்வி வளர்ச்சி திட்டம் பற்றி விவாதம் நடத்தியது.

1975—76ம் ஆண்டிற்குள் 6 வயது முதல் 11வயது வரை அனைத்துக் குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி அளிக்கப்பட வேண்டும் என 2½ ஆண்டுகளுக்கு முன்பு அக்குழு யோசனை கூறியது.

ஆண்டுகள் உருண்டோடி விட்டன. ஆலோசனைகளோ மூட்டை மூட்டையாகக் குவிந்துள்ளன. அரசு அதனைப்பற்றி மூச்சுவிடவில்லை.

என்சினியரிங், தொழில் நுணுக்க கல்வி, மருத்துவம், பட்டமேற்படிப்பு படிக்கும் மாணவர்களின் குடும்ப வருட வருமானம், 12 ஆயிரமாக இருக்குமானல், அக்குடும்பங்களுக்கு வருமான வரி சலுகை 1975—76-ம் ஆண்டு பட்ஜெட்டில் அளிக்கப்பட்டுள்ளது என்று நிதி அமைச்சர் சுப்ரமண்யம கூறுகிருர்.

இக்கூற்று டாடாக்களுக்கும் பிர்லாக்களுக்கும் அதே பட்ஜெட்டில் அளிக்கப்பட்டுள்ள வருமான வரிச் சலுகையை மறைக்க கூறுவதேயன்றி, கல்விமான்களின் எண்ணிக்கை பெருகுவதற்கான ஒரு உருப்படியான நடவடிக்கை அல்ல.

இந்தியாவின் மொத்த ஜனத் தொகையில் 1000க்கு 6 பேர்களே வருமான வரி கட்டுபவர்கள். இவர்களில் ஒரு பகுதியினருக்கு கல்வி வளர்ச்சிக்காக வருமான வரிச் சலுகை, கல்வி முன்னேற்றத்திற்கான நடவடிக்கை என்பது பச்சைப் பித்தலாட்டமாகும்.

1971-ம் ஆண்டு மக்கள் தொகை கணக்குப்படி சுமார் 44 கோடி மக்கள் வாழும் கிராமப்புறத்தில் படித்தவர்கள் 27 சதவீதம் பேர் தான் உள்ளனர் என்ருல், இந்தியாவில் கல்வி முன்னேற்றத்தைப் பற்றி என்ன சொல்வது?

இந்நிலையில் கூட, இருக்கின்ற கல்விமுறை பத்தாம் பசலித்தனமானது, காலதத்திற்கும வாழ்க்கைக்கும் ஒவ்வாதது, மாற்றப்படவேண்டும என்றகுரல் நாடெங்கும் ஒலிக்க ஆரம்பித்துவிட்டது.

கல்வி வாடையே அறியாத மக்கள் கடல் ஒருபக்கம்; இருக்கிற கல்வி முறையும் பயனற்றது என்றநிலைமற்ரெரு பக்கம்

இவ்விரு நிலைகளையும் பல்வேறு வழிகளைக் கையாண்டு காப்பாற்றி வருகின்றன மத்திய அரசும், மாநில அரசுகளும்.

இன்றைய பொருளாதார, அரசியல்நிலைமைகளை காப்பாறறவே அரசாங்கங்கள் இந்நிலைமைகளை காப்பாற்றுகின்றன என்பதைப் புரிந்து கொண்டால்தான் கல்வியாளர்களின் பெருககத்திற்கும் கல்வி சீர்திருத்தத்திற்கும் போராட முடியும்.

## ஏப்ரல் 6-ல்
# ஜனநாயக உரிமை பாதுகாப்பு நாள்
## மதுரையில் சர்வகட்சி ஊர்வலம்

மதுரை, ஏப். 4—

தமிழகம் முழுவதும் வருகிற 6-ந் தேதி (ஞாயிறு) சர்வ கட்சிகளின் சார்பில் 'ஜனநாயக உரிமை பாதுகாப்பு நாள்' அனுஷ்டிக்கப் படுகிறது.

### மதுரையில்

மதுரையில் மாலை 5 மணியளவில் கட்டபொம மன் சிலையிலிருந்து ஊர்வலம் புறப்பட்டு ஜான்சிராணி திடலை அடையும்.

அங்கு மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் ஏ. பாலசுப்ரமண்யம், சோசலிஸ்ட்கட்சித் தலைவர் வழக்கறிஞர் என். கே. பாகுலேயன், புரட்சி அதிமுக தலைவர் வழக்கறிஞர் ஜி. தர்மராஜன், தமிழரசுககழகம் சாரபில் வழககறிஞர் எம். மாரியப்பன், ஜனசங்கம் சார்பில் எஸ கே

(-5ம் பக்தி பார்க்க)

## ஏழை விவசாயிகளைக் கொடுமைப்படுத்தும்
# தி. மு. க. அரசின் கொள்முதல் திட்டம் உடனடி மாற்றம் கோரி மதுரையில்
# ஏப். 9-ல் ஆர்ப்பாட்டம்

மதுரை, ஏப் 1—

ஏழை விவசாயிகளை அலைக்கழித்துக் கொடுமைப் படுத்தும் நெல்கொள்முதல் திட்டத்தில் உடனடிமாற்றம் செய்ய வேண்டும் என்று திமுக அரசை வற்புறுத்தி, மதுரை மாவட்ட கலெக்டர் ஆபீஸ் முன்பு வருகிற 9-ந் தேதியன்று ஆர்ப்பாட்டம் நடக்கிறது. இந்த ஆர்ப்பாட்டம் செங்கொடிச் சங்கமான மதுரை மாவட்ட விவசாயிகள் சங்கத்தின் அறைகூவலின்படி நடக்கிறது.

இம்மாவட்டத்தில், குறிப்பாக மதுரை வடசகுத் தாலுகா முழுவதும் நெல் கொள்முதல் என்ற பேரால் ஏழை—எளிய விவசாயிகளும் விவசாயத் தொழிலாளர்களும் சூறையாடப்படுகிருர்கள்.

விலைவாசி உயர்வால் பாதிக்கப்பட்டு — உணவு ரேசன் இல்லாது மழையும் இன்றி தண்ணீர்த் தட்டுப்பாட்டால் நஷ்டமடைந்துள்ளனர். சாகுபடியில் கண்டு முதல் குறைந்து, குத்தகை கொடுத்தது போக குறைந்த நெல்லைக் கொண்டு அடுத்த மாதம் வரை வாழ்வதெப்படி என்று தெரியாது திணறுகிருர்கள்.

இப்படித் தவிக்கும் மக்களிடம் கொள்முதல் என்ற பெயரால் அரசு அதிகாரிகள் ஓடி ஓடிச் சென்று வீடுகளைச் சீல் வைப்பது — ஒரு மூடை இருந்தால் அரை மூடையும், 57 கிலோ என்று சொல்லி 60 அல்லது 62 கிலோ அளந்து கொள்வது — போலீசை வைத்து மிரட்டுவது — சிறைக்கனுப்புவேன் என்று பயமுறுத்துவது—ஆகிய கொடுமைகள் சரிக்க முடியாது.

### தூங்கும் குழந்தை சீல் வைக்கப்பட்டது

மீனாட்சிபுரம், பொருசுப்பட்டி, பொதும்பு, மிளகரணை, சமயநல்லூர் மற்றும் பல கிராமங்களிலும் மாங்குளத்தில் தூங்கும் குழந்தையுடனும் வீடுகள் சீல் வைக்கப்பட்டுள்ளன. விடிந்தால் திருமணம் நடக்க வேண்டிய வீடு மாலையில்சீல் வைக்கப்பட்டது. ஆள் இல்லாத வீடு சீல் வைக்கப்பட்டது. தண்ணீர்கூட குடிக்க முடியாதவாறு இரக்கமற்ற தன்மையில் கொள்முதல் நடப்பது தினசரி சம்பவமாகி விட்டது.

இதே சமயம் பெரும் நிலச் சுவான்தார்கள் தங்களது நெல்மூடைகளை வைக்கோல் போர், கரும்புசக்கை போர், நகரங்களில் உள்ள வீடுகள் ஆகிய வற்றில் பதுக்கி வைத்துக் கொள்கிருர்கள். இந்த வேலை எவ்வித தங்கு தடையுமின்றி பகிரங்கமாகவே நடக்கிறது.

தஞ்சை மாவட்டத்தில் பெரு மிராசுதார்கள் ஆர்ப்பாட்ட உண்ணுவிரதம்என்ற வுடன் பணிந்து செல்லும் தமிழக அரசும், அமைச்சர்களும், ஏழைகள் துன்புறுத்தப்படுவதைத் தடுக்க எவ்வித நடவடிக்கையும் எடுக்காததுமக்களிடம் அதிருப்தியையும், வெறுப்பையும் ஏற்படுத்தியுள்ளது.

### கொள்முதல் கொள்கையை மாற்றுக

எனவே 5 ஏக்கருக்குக் கீழ் நிலமுள்ளவர்களுக்கு கொள்முதலில் விலக்கு அளிக்கக் கோரியும், 5முதல் 10ஏக்கர் வரை நிலமுள்ளவர்களிடம் லெவி முறையிலும், 10ஏக்கருக்கு மேல் நிலமுள்ளவர்களிடம் உபரி முழுவதையும் கட்டாயமாகவும் கொள்முதல் செய்யக் கோரியும் வருகிற 9ந்தேதியன்று மதுரை மாவட்டக் கலெக்டர் ஆபீசில் ஆர்ப்பாட்டம் நடக்கிறது. காலையில் தல்லாகுளம பெருமாள் கோவில் திடலில் இருந்து ஊர்வலம் புறப்படும்.

இந்த ஊர்வலத்திலும், ஆர்ப்பாட்டத்திலும் ஜாதி, மத, அரசியல் வேறுபாடின்றி கலந்து கொள்ள வேண்டும் என்று மதுரை மாவட்ட விவசாயிகள் சங்கம், விவசாயத் தொழிலாளர் சங்கம் ஆகியவற்றின் சார்பில், தோழர்கள் கே பி ஜானகியம்மாள், வி ஏ கருப்புசாமி ஆகியோர் வேண்டியுள்ளனர்.

## நிர்வாகிகள் தேர்வு

கோட்டைமேடு, ஏப். 2—

கோட்டைமேடு விவசாயிகள் சங்கத்திற்கு தலைவராக ஆர். துரைச்சாமி, உதவித் தலைவராக மொக்கைச்சாமி, செயலாளராகஎஸ். முத்து, உதவிச்செயலராக பழனி, பொருளாளராக பிச்சை மற்றும் 20 நிர்வாக்குழு உறுப்பினர்களும் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

## பம்பாய் ஜனநாயக வாலிபர் சங்கம்
### புதிய நிர்வாகிகள்

தாராவி, ஏப். 2—

பம்பாய் ஜனநாயக வாலிபர் சம்மேளனத்தின் பொது உறுப்பினர் பேரவை அண்மையில் நடந்தபோது புதிய நிர்வாகிகள் தேர்வு செய்யப் பட்டனர்.

தோழர் எஸ். அசோக் குமார் ஆணையாளராக இருந்து நடத்திய தேர்தலில், புதிய தலைவராக பி.ராமசாமி, உதவித தலைவராக எஸ். சீத்தாராம், பொதுச் செயலாளராக கே. எஸ். முத்துலிங்கம், துணைச் செயலாளராக எம். பி. ஆசைத்தம்பி, பொருளாளராக எம். அண்ணுமலை, தணிக்கையாளராக எம். பூசிக் ஆகியோரும், நிர்வாகக் குழு உறுப்பினர்களாக சே. கமால், எம்.எஸ்.எச். அலி, டி. வி. ராஜன், கே. டி. தமபி, இ. கே. நாகூர், பி.எம்.சேகர் ஆகியோரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தோழர் கே.டி. தம்பி தலைமையில் நடந்த பேரவைக் கூட்டத்தில், எம் எஸ் எச் அலி வரவேற்புரை வழங்கினர்.

ஆண்டு அறிக்கையை பொதுச்செயலாளரும, வரவு - செலவு கணக்கை பொருளாளரும் சமர்ப்பித்து ஏகமனதாக ஏற்றுக் கொளளப்பட்டது.

இரயில்வேத் தொழிலாளர் போராட்டத்தில் இந்திரா அரசின் அடக்குமுறை நடவடிக்கைகளுக்கு வன்மையான கண்டனம தெரிவிக்கப்பட்டது. அனைத்து பழிவாங்கும் நடவடிக்கைகளையும் ரத்துச் செய்யும்படி வற்புறுததப்பட்டது.

பிறமாநிலங்களில் தொழிலாளர்களுக்காக போராட்டங்களில ஈடுபடும் வலது கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் அச்சுதமேனன் தலைமையில செயல்படும் கேரள அரசு, அங்கு போராடும் அரசு ஊழியர்களையும், பிற தொழிலாளர்களையும் அடக்கி ஒடுகக முயல்வதற்கு கண்டனம் தெரிவிக்கப்பட்டது.

## கல்கத்தாவில்
# இந்திரா குண்டர்களின் 'நாகரீகம்'

கல்கத்தா, ஏப். 2—

கல்கத்தா பல்கலை கழகத்தில் ஜெயப்பிரகாஷ்நாராயண் கலந்து கொள்ள விருந்த கூட்டத்தை நடத்த விடாமலும், அதில் அவரை கலந்து கொள்ள விடாமலும் காங்கிரஸ் குண்டர்கள் தடுத்து விட்டனர்.

நவநிர்மன் சமிதியினர் ஜெயப்பிரகாஷ் நாராயணின் கூட்டத்திற்கு இன்று ஏற்பாடு செய்திருந்தனர். கூட்டம் நடப்பதற்கு முன்பு ஊர்வலமாக வந்த காங்கிரசு கட்சியின் சத்ரபரிஷத் இளைஞர் காங்கிரஸ் குண்டர்கள், கூட்டம் நடைபெற விருந்த இடத்திற்கு வந்து ஆர்ப்பாட்டம் செய்தனர், ஜெயப்பிரகாஷ் நாராயண் எதிர்ப்பு கோஷமிட்டனர். நவநிர்மன் சமிதியினரும் பதில் கோஷமிட்டனர்.

இந்நிலையில் கூட்டத்தில் கலந்துகொள்ள ஜெயப்பிரகாஷ் நாராயண் வந்தார். அவரது காரைச் சுற்றி காங்கிரஸ் குண்டர்கள் நின்று கொண்டு அவரை இறங்க விடவில்லை. கற்களும் செருப்புகளும் வீசப்பட்டன. கார் பலத்த சேதத்திற்குள்ளாகியது.

மேற்கு வங்க மாநில சோசலிஸ்ட் கட்சி தலைவர் ஸ்வராஜ் பாந்துபட்டாசார்ஜி சோசலிஸ்ட் கட்சி எம் பி யான சமர்குஹா, நவநிர்மன் கூட்டுச் செயலாளர் திலிப் மித்ரா ஆகியோர் படுகாயமடைந்தனர். காங்கிரஸ் குண்டர்களின் தாக்குதலில் பலருக்கு ரத்தம் வடிந்தது. சிலர் தரையில் விழுந்துவிட்டனர்.

சில காங்கிரஸ் குண்டர்கள், ஜெயப்பிரகாஷ் நாராயணின் கார் மீது ஏறி டான்ஸ் ஆடினர்.

இத்தனை நடவடிக்கைகளையும் போலீசார்களும் போலீஸ் அதிகாரிகளும் வேடிக்கை பார்ததுக்கொண்டிருந்தனர். அவர்களிடம் நவநிர்மன்சமிதியினர் புகார் செய்தும் நிலைமையை ஒழுங்குக்கு கொண்டுவரச் செய்ய எம்முயற்சியும் எடுக்கவில்லை.

# உடுமலை தொழிலாளர் போனஸ் கோரிக்கை

உடுமலை, ஏப். 1—

உடுமலையை அடுத்துள்ள பாலப்பம்பட்டியிலுள்ள ஸ்ரீ சிவசக்தி ஸ்பின்னிங் மில்லில் பணிபுரியும் 28தொழிலாளர்களும் திமுக சங்கத்திலிருந்து விலகி சிஐடியூ, சங்கத்தில் சேர்ந்து போனஸ், சம்பள உயர்வு ஆகிய கோரிக்கைகளுக்காக உறுதியுடன் போராடி வருகிருர்கள்.

கடந்த நவம்பரிலேயே கோரிக்கை முன்வைக்கப்பட்ட போதிலும் சுமுகமாக பேச்சு வார்த்தை மூலம் தீர்த்துக்கொள்ளலாம் என்று கூறி காலம் கடத்திவந்தது நிர்வாகம்.

எனவே கோரிக்கை சம்பந்தமாக கோவை உதவி லேபர் கமிசனரிடம சிஐடியூ சார்பில் தோழர் எம். நஞ்சப்பன் கன்சிலியேசன் போட்டார்.

அங்குநடந்த பேச்சு வார்த்தையில் 5¼, 5½, 6 என்று மூன்று 'கேட்டகரி'யாகப் பிரித்துத் தரலாம் என்று ஏ. சி. எல். ஆலோசனை சொன்ஞர். இந்த யோசனையை ஒரு வருட காலத்துக்கு ஏற்றுக கொள்வதாக தொழிலாளர் தலைவர் தோழர் எம். நஞ்சப்பன் ஒப்புக் கொண்டார், நிர்வாகியும் ஒப்புக் கொண்டார். ஆனால உடன்பாடில கையெழுத்துப்போட வராமல் பல்வேறு காரணங்களகூறி ஏமாற்ற முயற்சிககிருராம.

இந்த மோசடியையும் தில்லுமுல்லையும் எதிர்த்து தொழிறசங்கமும் தொழிலாளர்களும தொடர்ந்து போராடி வருகிருர்கள்.

(2-ம் பத்தி தொடர்ச்சி)

பாலகிருஷ்ணன் மற்றும் பாரதீய லோக்தளம் தலைவர் ஆகியோர் பேசுவார்கள்.

### கமுதமலையில்

இங்கு எட்டாம் பலிபீடம் திடலில எஸ்சி காளியப்பன் (திமுக) தலைமையில் நடக்கும் பொதுக்கூட்டத்தில் ஆர். முத்தையா கேபி பாண்டியன் [மார்க்சிஸ்ட) எம் செல்லையா (சிஜடியூ) எஸ் சங்கர் (ஸ்தா. காங்] எஸ் வேல்சாமி ஆகியோர் பேசுவார்கள்.

# பீகார் மாநில முதல்வர் பதவிக்கு மும்முனைப் போட்டி

பாட்னு ஏப் 1—

பீகார் முதலமைச்சர் பதவியிலிருந்துகபூர்விரட்டப் படுவதை தொடர்ந்து அப் பதவியைப் பிடிப்பதில் மூவர் களத்தில்இறங்கியுள்ளனர். கபூருக்கு முன்பு முதலமைச்சராக இருந்த கேதார் பாண்டே இறந்துபோன மத்திய ரயில்வே அமைச்சரின் சகோதரர் ஜெகனத் மிஸ்ரா ஆகியோரோடு திருமதி சுமித்ரா தேவி என்னும சட்டமன்ற உறுப்பினரும் முதலமைச்சர் பதவியை பிடிப்பதில் ஈடுபட்டுள்ளார்.

கேதார்பாண்டேயும் ஜெகனத் மிஸ்ராவும் கபூரை விரட்டுவதற்கு கூட்டாகச் செயல்பட்டனர். இப்போது அடுத்த முதலமைச்சர் யார் என்ற பிரச்சினை வந்தவுடன் அப்துல் கபூரிடம், ஜெகனத் மிஸ்ரா சென்றுதான் முதலமைச்சராவதற்கு அவரின் ஆசிவேண்டுமென்றும் அவருடைய கோஷ்டியை சேர்ந்தவர்களை தன்னை ஆதரிக்குமாறு கபூரிடம் வேண்டுகோள் விடுத்துள்ளார். பதவியை இழக்கப்போகிற கபூருக்கோ, கேதார்பாண்டே மீதோ ஜெகனத் மிஸ்ரா மீதோகுரோதம் கோபம் இல்லையாம். சட்டசபையினரை அணுகி அவர்களது முடிவுக்கு விட்டுவிடுங்கள் என மிஸ்ராவின்முகத்தில் கரிபூசி கபூர் அனுப்பி விட்டார்.

கபூரின் ஆதரவாளர்கள் கேதார்பாண்டேயை ஆதரிக்கக் கூடுமென்று தெரிகிறது.

திருமதி சுமித்ராதேவியின் கோஷ்டியினர் முதலமைச்சர் பதவிக்கு போட்டியிடுமாறு தூண்டவே அவாது பதவி ஆசையும் கொழுந்து விட்டெறிய ஆரம்பித்து விட்டது.

எனவே திருமதி சுமித்ரா தேவியும் தான் முதலமைச்சர் பதவியைப் பிடிக்க பீகார் சட்டமன்ற காங்கிரஸ்உறுப்பினர்களை பிடித்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

# போலீஸ் ஸ்டேஷன் முன் ஆர்ப்பாட்டம்

சென்னை, ஏப். 1—

இங்குள்ள கன்கார்டு அராய் கம்பெனி நிர்வாகத்தின் அட்டூழியங்களுக்கு ஆதரவாக போலீஸ், தொழிலாளர்கள் மீது பொய் வழக்கு தொடுத்துவரும் அக்ரமத்தை எதிர்த்து திருவான்மியூர் போலீஸ் நிலையம் முன் தொழிலாளர்களின் ஆவேச ஆர்ப்பாட்டம் ஒன்று நடந்தது.

துரைப்பாக்கம் பகுதியில உள்ள மேட்டுக்குப்பத்தில் தொப்பிகள் செய்யும் கன்கார்டு அராய் தொழிலாளர்கள் சிஐடியூ சங்கத்தில் உறுப்பினர்களாகச் சேர்ந்ததற்காக ஐவரை ஆட்குறைப்பு செய்தது. இதைக் கண்டித்து ஆர்ப்பாட்டம் நடந்து வருகிறது.

கடந்த 2 மாதங்களாக லேபர் ஆபீசர் முன் முறையாக பேச வருவதும் இல்லை. இதைக் கண்டித்து, இக்கம்பெனி முதலாளியின் மற்ரெரு கம்பெனியான ஐ ஆர் சி (நத்தம்பாக்கம்] தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

இந்த ஆர்ப்பாட்டத்தின்போது நிர்வாகம் போலீசை வரவழைத்து 19 தொழிலாளர்களை கைது செய்து வழக்குத் தொடுக்கச் செய்தது. தவிர, வாட்ச்மேனை அடித்ததாக நான்கு தொழிலாளர்கள் மீது வழக்கும் ஜோடிக்கப்பட்டது.

போலீசின் இந்த அக்ரமத்தையும், முதலாளி ஆதரவுப் போக்கையும் எதிர்த்து சங்கச் செயலாளர் சி பி தாமோதரன், வாசு, முத்தையா ஆகியோர் தலைமையில் ஊர்வலமாக புறப்பட்டு திருவான்மியூர் போலீஸ் நிலையம் முன்பு பெரும்ஆர்ப்பாட்டம் நடந்தது.

யூனிட்டிடூல்ஸ், மாடர்ன் டூல்ஸ், கர்மைகரோல், செந்தூர், போர்கிங் ஆகிய தொழிலாளர்களும் கலந்து கொண்டு ஆதரவளித்தனர்.

## குடியாத்தம்:
## வீட்டு வரி உயர்வுக்கு வாலிபர் முன்னணி
# கடும் எதிர்ப்பு

குடியாத்தம் ஏப் 3—

வறட்சி, விலைவாசி ஆகியவற்ருல் தத்தளிக்கும் இவ்வேளையில் குடியாத்தம் நகராட்சியில் புதிய வரி விதிக்கப்பட்டதைக் கண்டித்தும் ஏழைகள் வீட்டுக்கு அதிக வரியை வஜா செய்யக் கோரியும், சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி சார்பில் கடந்த 25-ந் தேதி நகர சபை அலுவலகம், தாலுகா அலுவலகம் ஆகியவற்றின் முன்பு பெரும் ஆர்ப்பாட்டங்கள் நடந்தன. வாலிபர் முன்னணிதலைவர் என் இ கிருஷ்ணன் தலைமை வகித்தார். பல்வேறு அரங்கங்களைச் சார்ந்த நூற்றுக்கணக்கானோர் வி கே முனிரத்னம், ப அ மதியழகன். எச் எம் அத்தாவுல்லா, ஆர் பாமசிவம், டாக்டர் வி முனுசாமி, ஸ்ரீராமன், கே பி பழனி மாணவர் சம்பத் குமார் ஆகியோர் தலைமையில் கலந்து கொண்டனர்.

அதிகாரிகளிடம் மகஜர்கள் அளிக்கப்பட்டன. அதன் நகல்கள் அமைச்சர்களுக்கும் அனுப்பப்பட்டன.

அதில் அனைவருக்கும் ரேசன் கார்டுகள் கோரியும் —அவசர நிலை 'மிசா' டி ஐ ஆர் முதலிய அடக்குமுறைச் சட்டங்களை வாபஸ் பெறக் கோரியும், வேலை வாய்ப்புக் கோரியும் வற்புறுத்தப்பட்டிருந்தன.

# பின்னங்கால் பிடரியில் அடிபட ஓடுகிருன், ஓடுகிருன், ஓடுகிருன்
## போர்டின் பொம்மை லான்நாலின் ஓட்டம்

ஜாகர்த்தா, ஏப். 3—

தென்கிழக்கு ஆசியாவில் கம்யூனிஸம் பரவாமல் தடுக்க அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் அந்தந்த நாடுகளில் கைப்பொம்மைகளைக் காவல்நாய்களாக வைத்தார்கள்.

தென்கொரியாவில் சின்மான்ரீயை ஆட்சிக்கட்டிலில் போட்டார்கள், பார்மோசாவில் சியாங்கே ஷேக்கை ஊன்றி வைத்தார்கள்; தென் வியட்னுமில் தியூவை நிலைகுத்தி வைத்தார்கள்; கம்போடியாவில் லான்நாலை தூக்கிவைத்தார்கள்.

### என்ன கதியானுரென்று சரித்திரத்தைப் பாருங்கள்!

தென்கொரிய மக்களின் எழுச்சிப் புயலில் சின்மாரீன் விழுந்து சின்னு பின்னமானுன். அதற்குப்பின் வந்த பிற்போக்கு அரசும் அவசரநிலை ஆட்சியில்தான் நாட்களை எண்ணிக் கொண்டிருக்கிறது.

பார்மோசா தீவின் மரக்கிளையில் அமர்ந்து கொண்டு, செஞ்சீன முன்னேற்றத்தைக் கண்டு பெருமூச்சு விட்டுக் கொண்டிருக்கிறது சியாங் கே ஷேய்க் தேவாங்கு!

தென் வியட்னும் தியூ, ரொம்பப் போனல் இன்னும் ஒரு மாதம் வரையிலதான் மேகாங் ஆற்றுத் தண்ணீரைக் குடிதது்க் கொண்டிருபபான். எவருக்கும் தெரியாமல் திடீரெனத் தப்பி ஓடுவதற்கு ஹெலிகோப்டர் விமானத்தை ஏற்பாடு செய்திருக்கிருன். விடுதலைப் படையின் ராக்கெட் முழக்கம் கேட்டு தினந்தோறும் செத்துப் பிழைக்கிருன்.

### திரும்பிப்பாராமல் ஓடுகிருன் லான்நால்

கம்போடிய மன்னர் சிகானூக் வெளிநாடு போயிருந்த சமயத்தில், அமெரிக்கத் தூண்டுதலின்பேரில் அதிபராகி, அமைதி தவழ்ந்த கம்போடிய பூமியை அமர்க்களமாக்கியவன் லான்நால்.

தேசபக்த கேமர் படைகளின் பீரங்கி வேட்டுகளுக்கு ஈடு கொடுக்க முடியாமல், நாமபென் நகரை விட்டு— குனிந்த தலை நிமிராமல்; கையில் தடி யூன்றி, தள்ளாடித் தள்ளாடி விமானத்தை நோக்கிச் சென்ருன். அவனுடன் பொம்மைப் பிரதமர் லாங் போரட்டும் சென்ருர்.

தான் இந்தோனேசியாவுக்குப் போய் 10 நாள் தங்கிவிட்டு—பிறகு, உடல் நலத்தையும் குடல்நலத்தையும் பேண ஹவாய் தீவிலுள்ள அமெரிக்க இராணுவ ஆஸ்பத்திரிக்குப் போய் அட்மிட் ஆகப்போவதாகவும் கூறினுர்—லான்நால். இவருடன் இன்னும் 2 டஜன் அதிகாரிகளும் சென்றனர்.

மைச்சிமிழ் இருட்டிலே — ஹெலிகோப்டர் படிகளிலே நாலு பேர் கைத்தாங்கல் கொடுக்க—தடுத்தடுமாறி ஏறினுர். லான்நால் அமெரிக்க தூதர் ஜான்கந்தர் டின் ஏதோ ஒன்றிரண்டு வார்த்தைகளை லான்நாலின் காதில்ஓத—டாட்டா கொடுக்கவும் சக்தியின்றி ஹெலிகோப்டர்கூண்டுக்குள் அவசர அவசரமாக புகுந்து கொண்டார்.

கேமர் புரட்சிப்படைகளின் ராக்கெட் குண்டுகள் டுமீல் டுமீல் என நாம்பென் நகர விமான நிலையத்தை நொறுக்கிக் கொண்டிருந்தது.

லான்நால் தாய்லாந்தின் தலைநகரான பாங்காக் நகரம் சென்று — அங்கிருந்து இந்தோனேசிய சுற்றுலா பயணிகளின் தீவான பாலி தீவுக்குப் போய்ச் சேர்ந்தார்.

### மாலிக்கும் சுகார்த்தோவும் மிரண்டு கிடக்கின்றனர்

இந்தோனேசியாவின் வெளிநாட்டு மந்திரி ஆடம் மாலிக்கும். பிரதமர் சுகார்த்தோவும், லான்நாலைக் கூட்டிக்கொண்டு போய் படுக்கையில் போட்டு ஆறுதல் சொன்னுர்கள்.

நாலைந்து ஆண்டுகளுக்கு முன்னே, ஐந்துலட்சம் கம்யூனிஸ்டுகளையும் அவர்களின் தலைவர் ஐதிக்கையும படுகொலை செய்த சுகார்த்தோவும மாலிக்கும், கம்போடியாவிலும் தென் வியட்னுமிலும் கம்யூனிஸ்ட் எதிர்ப்பாளர்களுக்கு கிடைத்து வரும் அடிகளைப் பற்றி லான்நாலிடம் கேட்டு நடுநடுங்கிப் போனுர்கள்.

கம்போடியாவில்தான் பட்ட அடிகளைப் பற்றி, கதறிக்கதறி யழுதான் லான்நால்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு, மதுரை, 625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே.முத்தையா.